8th April 1958]

என்றும் சொன்னார்கள். ஆறு மாத காலம் ஆயிற்று. இன்னும் ஆராய்ச்சி எடுத்துக்கொள்ளவில்லை. அதை ஏற்படுத்த முடியுமா? அதற்குள்ள சூழ் நிலையை ஏற்படுத்தி, பொருள்கள் கிடைத்தால், தொழிற்சாலை ஏற்படக்கூடிய நிலையை ஏற்படுத்துமா என்று திட்டவட்டமாக அரசாங்கம் தெரிவிக்க வேண்டும் என்று கேட்டுக் கொள்ளுகிறேன்.

THE HON. SRI R. VENKATARAMAN : சர்க்கார் ஒதுக்கியிருக்கும் பணம் போதாது என்பதை அங்கத்தினர் அவர்களிடம் சொன்னதை என்னிடத்தில் சொல்லியிருந்தால் முயற்சி செய்யலாம். ஆராய்ச்சி நடந்து கொண்டு இருக்கிறது. அதன் பலனாக, அங்கே கிடைக்கும் 'காஸ்', வாயு, இண்டஸ்டிரியல் யூஸ், தொழிற்சாலை உபயோகத்திற்கு பயன்படுமானால் சர்க்கார் எல்லா முயற்சிகளும் செய்யும்.

SRI S. NAGARAJA MONIGAR : கனம் பொருந்திய சர்தார் வேதரத்தினம் அவர்களுக்கு கூட மத்திய சர்க்கார் பேரில் சந்தேகம் ஏற்பட்டிருக்கிறதா என்று கேட்கிறேன்.

MR. SPEAKER : I rule the question out of order.

*Petroleum*

* 643 *Q.*—SRI P. G. MANICKAM : Will the Hon. the Minister for Industries be pleased to state—

(*a*) whether experts have made any investigation of the occurrence of petroleum in this State; and

(*b*) the details about the steps proposed to be taken by the Central and State Governments in the matter?

THE HON. SRI R. VENKATARAMAN : (*a*) Yes, Sir.

(*b*) The Geological Survey of India are conducting survey of the oil possibilities in this State as part of their programme of oil survey in India. This Government have asked for a high priority for investigation in this State.

SRI K. VINAYAKAM : தேர்தல் காலத்திலே, இங்கே இருக்கிற ஒரு எதிர் கட்சிக்காரர்கள் காவேரித் தண்ணீர்ல் எண்ணெய் இருக்கிறது, எங்களை அனுப்பினால் துருவி ஆராய்ந்து எண்ணெய் தருவோம் என்றார்களே, அதை ஆராய்ந்து பார்த்தார்களா ? காவேரித் தண்ணீரில எண்ணெய் இருக்கிறது என்ற முடிவுக்கு வந்தார்களா ?

MR. SPEAKER : The hon. Member may put a separate question.

SRI P. G. MANICKAM : பெட்ரோல் ஊற்றுகள் ஆங்காங்கே அகப்படலாம் என்ற யோசனையை நிபுணர்கள் தெரிவித்தார்களே, அதைப்பற்றி மத்திய சர்க்காருக்கு, நம் சர்க்கார் என்ன யோசனை தெரிவித்திருக்கிறது என்று அறிய விரும்புகிறேன்.

THE HON. SRI R. VENKATARAMAN : அந்த எண்ணெய் வங்காளத்திலிருந்து, கன்யாகுமரி வரை இருக்கும் பிரதேசங்களில் அகப்படலாம் என்ற யோசனை சொல்லப்படுகிறது. புதிதாக ஸர்வே நடத்த வேண்டும் என்று சொல்லப்படுகிறது.

[8th April 1958

Continuation of the gravity and magnetic surveys of the sedimentary areas in the Tiruchirappalli district and the eastern belt of Madras State. Reconnaissance, reflection, seismic traverse along the coastal belt in the South Arcot and Tiruchirappalli districts.

MR. SPEAKER : Questions are over.

[*Note.*—**An asterisk (*) at the commencement of a speech indicates revision by the Member.**]

## II.—CALLING ATTENTION TO A MATTER OF URGENT PUBLIC IMPORTANCE UNDER RULE 40 OF THE ASSEMBLY RULES *RE* FIRE ACCIDENT AT GURUSWAMY GRAMANI GARDEN, SEMBIAM.

9-25 a.m. **MR. SPEAKER** : ஸ்ரீமதி சத்தியவாணிமுத்து 40-வது ரூல் பிரகாரம் உள்நாட்டு மந்திரியின் கவனத்துக்கு ஒரு முக்கிய விஷயத்தைக் கொண்டுவரப்போகிறார்கள். கனம் அங்கத்தினர் திருமதி சத்தியவாணிமுத்து அவர்கள் பேசலாம். சுருக்கமாக முடிக்கவேண்டும் என்று கேட்டுக் கொள்ளுகிறேன்.

9-25 **DR. SRIMATHI SATHIYAVANIMUTHU** : சட்ட மன்றத் தலைவர் அவர்களே, எனது தொகுதியைச் சேர்ந்த குருசாமி கிராமணித் தோட்டத்தில் 3-4-1958 பிற்பகல் திடீரென்று பல வீடுகள் தீப்பற்றி எரிந்தன. வழக்கம் போல, தீ அணைக்கும் படையினர் வரும் முன்னமே, ஊர் பொதுமக்களும், தொழிலாளர்களும் சேர்ந்து தீயினை அணைத்திருக்கிறார்கள். இதிலே பாதிக்கப்பட்டவர்கள், ஒரு குடும்பத்தைத் தவிர, ஏனையோர்கள் முஸ்லிம் சமுதாயத்தைச் பாதிக்கப்பட்டு இருக்கிறார்கள். அவர்கள் அங்கும் இங்கும் இடமில்லாமல் தத்தளிக்கிறார்கள். ஒவ்வொரு வீட்டிலும் தீயைத் தடுத்து சொத்துக்களை எடுக்க முயற்சித்தும், எதனையும் எடுக்க முடியாத காரணத்தால், நடுத் தெருவில் விடப்பட்டு தவிக்கிறார்கள்.

தீ பற்றிய செய்தி கிடைத்தவுடன், அமைச்சர் அவர்களுக்கும், மற்றவர்களுக்கும் செய்தியைக் குறித்து, தெரிவித்தும் காலத்தில் வேண்டிய நடவடிக்கை எடுக்கவில்லை என்று தெரிகிறது. குறிப்பாக ரூ. 100 முதல் ரூ. 4,000 வரை ஒவ்வொருவரும் சொத்து நாசம் அடைந்திருக்கிறார்கள். சர்க்கார் மாமூல் முறையிலே, தாமதப்படுத்தி, மூன்று மாதம், ஆறு மாதம் கழித்து, 25 ரூபாயை கொடுக்காமல், விரைவில் அதற்குண்டான ஏற்பாடு செய்யவேண்டும். தெரிந்தவரை, குடும்பங்கள் வசதியான நிலையில் இருந்தவர்களாகவே தெரிகிறது. ஒரு வீட்டில் நான் கண்டேன், உபயோகத்தில் இருந்த ரேடியோ பற்றி எரிந்து, வொயர்களை மட்டும் காண முடிந்தது. வசதியோடு இருந்தவர்கள் என்ற காரணத்தால், சற்று அதிகமான பொருள் உதவி செய்து குடும்பங்களைக் காப்பாற்ற வேண்டும் என்றும், தாமதமின்றி உதவியளிக்கவேண்டும் என்றும், இதுவரை சர்க்கார் ஏதாவது உதவி செய்திருந்தால் அதனைச் சொல்லுமாறும் அமைச்சர் அவர்களைக் கேட்டுக்கொள்ளுகிறேன்.

**THE HON. SRI M. BHAKTAVATSALAM** : கனம் சபாநாயகர் அவர்களே, குருசாமி கிராமணித் தோட்டத்தில் அல்ல, செம்பியம் தில்லைநாயகம் பிள்ளை தெருவில், எப்ரல் 3-ம் தேதி, பிற்பகல் 3-43 மணிக்கு, நெருப்பு விபத்து ஏற்பட்டதாக தகவல் வந்தது. உடனே எழும்பூர், வேப்பேரி, கீழ்பாக்கம், வண்ணாரப்பேட்டை இவ்விடங்களிலுள்ள தீயணைக்கும் படைகளை அனுப்பினார்கள். நெருப்பு மூன்று மணி நேரத்தில் அணைக்கப்பட்டது. தீ எதனால் ஏற்பட்டது என்பது தெரியவில்லை. இந்தத் தீயினால் இழக்கப்பட்ட குடிசைகள், வீடிழந்த குடும்பங்கள் எண்ணிக்கை இவைகள் தரப்பட்டிருக்கின்றன. அழிக்கப்பட்ட வீடுகள் 25, வீடுகளை இழந்த குடும்பங்கள் 32 ; மாடாவது, மனிதனாவது உயிரிழந்தது ஒன்றும் இல்லை. இந்தத் தீயினால் ஏற்பட்ட சேதம் ரூ. 4,300. நெருப்பணைக்கும் யூனிட்டுகள் வேலை செய்ததால் காப்பாற்றப்பட்ட சொத்துக்களின் மதிப்பு ரூ. 10,700.

எப்ரல் மாதம் 4-ம் தேதியன்று கலெக்டர், மேயர், மற்றும் நகரசபை அதிகாரிகள் எல்லோரும் அந்த இடத்திற்குச் சென்று, தீயினால் பாதிக்கப்பட்டவர்களுக்கு இலவச உணவு கொடுக்க ஏற்பாடு செய்திருக்கிறார்கள்.